16th March 1961]

THE HON. SRI V. RAMAIAH : அதற்குந் தனி கேள்வி போடவேண்டும்.

SRI M. A. B. ARUMUGHASAMY : மதுரை ஜில்லாவில் பஸ்கள் போகாத கிராமங்களிலே பஸ்கள் போவதற்கு ஏதாவது வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்வதோடு, அப்படி பஸ்கள் இதுவரை அப்படிப்பட்ட கிராமங்களுக்கு அனுமதிக்கப் படாததின் காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : பஸ்ஸை போகமுடியாத கிராமங்களுக்கு எப்படி பஸ்கள் விட முடியும்? அப்படிப்பட்ட சூழ்நிலை அங்கு இருக்கின்ற காரணத்தால், பஸ்கள் விடுவதற்கில்லை.

SRI V. SUBBIAH : புதிதாக பஸ்களை நீடிக்கவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டிருப்பவர்களுக்கு வசதியாக, இப்போது இருக்கக்கூடிய 15 மைல் என்று இருப்பதை 25 மைலாக நீடிப்பதற்கு ஏதாவது அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

(பதில் இல்லை.)

SRI A. MARIAPPAN : ஆரம்பத்தில் 15 மைல் என்று பஸ் சொந்தக்காரர்கள் அனுமதி வாங்கிக்கொண்டு, மறுபடியும் அதை அதிக மைல்களாக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வதால், கிராம மக்களுக்கு கஷ்டங்கள் ஏற்படுகிறது என்பதைச் சர்க்கார் உணருகிறதா ?

MR. SPEAKER : இதிலே எப்படி இந்தக் கேள்வியைக் கேட்க முடியும். இந்தக் கேள்வி கிராமப்புறங்களிலே பஸ் போக்குவரத்தை அதிகரிக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்பது. தாங்கள் கேட்பதோ அக்விசிஷனைப் பற்றி. எப்படி இந்தக் கேள்வியைக் கேட்க முடியும் ?

*Maternity training*

* 871 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of students that are undergoing Maternity training and the places where they are trained;

(b) whether there is any proposal to increase the present strength; and

(c) if so, the new strength?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) A statement [a] is placed on the table of the House.

(b) No, Sir.

(c) Does not arise.

---

[a] Printed as Appendix II on page 699 infra.

[16th March 1961

SRI M. K. SOMASUNDARAM : ஸார், மேஜைமேல் வைக்கப் பட்டுள்ள அறிக்கையில் செங்கல்பட்டு, நாகப்பட்டினம், கடலூர் போன்ற இடங்களில் மிகக் குறைவாக இருக்கிறதே. அதை உயர்த்துவதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக் கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எங்கெங்கே வசதி இருக்கிறதோ அங்கேயெல்லாம் பயிற்சி கொடுக்கப்பட்டு வருகிறது. 66, 59 என்றும் சில இடங்களில் இருக்கிறதே, அதை யும் கவனிக்கவேண்டும்.

*Renovation of temple (Utharakosamangai)*

* 873 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether there is any proposal to renovate the ancient temple at Utharakosamangai, Ramanathapuram district; and

(b) the age of the holy "Elanthai" tree in the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) Information is not available.

SRI K. VINAYAKAM : This famous temple has been praised even by Nayanars of the olden days and a very big congregation of Hindus come to the temple. In view of this, will the Government take steps to renovate the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த இலந்தை மரம் உள்ள ஆலயம் மிகப் பழமையானதுதான். இந்த ஆலயத்தைப் பற்றிக் கேட்டார்கள். என்னிடம் இப்போது தகவல் இல்லை. இருந்தாலும் வரலாறு கூறுகிறது இராவணனுக்கு முன்னே ஏற் பட்டது என்று. இந்த ஆலயத்திற்கு இந்த நாட்டிலே இருந்தும், இலங்கையிலே இருந்தும் பல யாத்திரிகர்கள் வருகிறார்கள். ஆகவே இது பழமைவாய்ந்த, ரொம்ப நாட்களாகத் திருப்பணி செய்யா மல் இருந்த கட்டிடம். இதற்குத் திருப்பணி செய்யவேண்டுமென்று ரொம்ப நாட்களாக முயற்சி நடந்துகொண்டிருக்கிறது. தேவஸ்தானம் சார்பாக 2,07,123 ரூபாய் 30 ந.பை. பாங்கில் போட் டிருக்கிறார்கள். அதேமாதிரி இந்தத் திருப்பணியை ஏற்றுக் கொண்டு நடத்த இருக்கும் செட்டியார்களும் 2 லட்சம் ரூபாய் அவர்களுடைய பங்காக போட இருக்கிறார்கள். சீக்கிரத்தில் இந்த வேலை எடுத்துக்கொள்ளப்படும். ஆனால் இதற்கு முன்னால் திருப்பணி வேலை நடந்துகொண்டிருக்கிறது.

SRI K. VINAYAKAM : சமீபத்திலே பெய்த பேய்மழையின் காரணமாக தண்ணீரானது கோவிலுக்குள்ளே புகுந்துவிட்டதால் ஒரு மாத காலத்திற்குமேல் பக்தர்கள் கோயிலுக்குள் போக முடியாதபடி ஒரு நிலைமை ஏற்பட்டது என்று சொல்லப்பட்டது. ஆகவே, உடனடியாக ரிப்பேர் செய்வதற்கு முயற்சி எடுத்துக் கொள்வார்களா ?